

# ॥ श्री मीनाक्षीस्तोत्रम् ॥

# ஸ்ரீ மீனாக்ஷீ ஸ்தோத்ரம்

ஸ்ரீ காமகோடி க்ரந்தாவலி : 60

1941 : [illegible]

# ॥ श्री मीनाक्षीस्तोत्रम् ॥

# ஸ்ரீ மீனாக்ஷீ ஸ்தோத்ரம்

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான
**ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ**
**ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்**
அருளிய திவ்ய ஸ்ரீமுகத்துடன்
கூடியது

ஸ்ரீ ராம ஜயம்
வைகாசி மீ ௨௧௨
அநந்த [illegible]



**ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்**
4, பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை-1



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்

श्रीः

श्रीः

मुद्रा

श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य श्रीमच्छङ्करभगवत्पादप्रतिष्ठित-श्रीकाञ्ची कामकोटिपीठाधिप जगद्गुरु श्रीपादैः क्रियते नारायणस्मृतिः ॥

श्रीमूकपञ्चशती-मुकुन्दमाला-शिवपादादिकेशान्तवर्णनादीन् गरिष्ठान् ग्रन्थविशेषान् द्राविडचनुवादैः साकं प्रकाशयित्वा आस्तिकानां भक्तिभावमभिवर्धयद्भिः अस्मत्प्रियान्तेवासिभिः श्रीकामकोटिकोशस्थाननिर्वाहकैः अद्य श्रीभगवत्पादादिमहनीयैः सर्वजनोद्धारणार्थमनुगृहीताः भगवन्मूर्तिप्रभेदगुणवर्णनपटीयांसः भक्तिरससर्वस्वभूताः श्रीहनूमत्पञ्चरत्न-सुब्रह्मण्यभुजङ्गादिस्तोत्रतल्लजाः द्राविडचनुवादैः साकं प्रकाशयिष्यन्त इति विदित्वा परमां मुदं भजामः ।

आस्तिकाः एतानि स्तुतिरत्नानि सार्थानुसन्धानं पठन्तः शृण्वन्तश्च भगवद्भक्तिपरवशीकृतस्वान्ताः श्रीचन्द्रमौलीश्वरकृपापात्रीभूताः सकलभाग्यजातं प्राप्नुवन्त्वित्याशास्महे ।

यात्रास्थानम्
इलैयात्तकुटी
शुभकृच्छ्रावणशुद्धप्रथमा

नारायणस्मृतिः ।

ஸ்ரீ:

முத்திரை

**ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யவர்ய**
**ஸ்ரீமத் சங்கரபகவத்பாத ப்ரதிஷ்டித**
**ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு**
**ஸ்ரீபாதை: க்ரியதே நாராயண ஸ்ம்ருதி: ||**

ஸ்ரீ மூகபஞ்சசதீ - முகுந்தமாலா - சிவபாதாதி கேசாந்தவர்ணனம் முதலிய அரும்பெரும் நூல்களைத் தமிழுரையுடன் வெளியிட்டு ஆஸ்திகர்களின் பக்தி உணர்ச்சியை வளர்க்கும் நம் பிரிய சிஷ்யரான ஸ்ரீ காமகோடி கோசஸ்தான நிர்வாஹகர்கள், இப்பொழுது ஸ்ரீ பகவத்பாதர்கள் முதலிய பெரியோர்கள் அருளிய பக்திமயமான ஸ்தோத்திரங்களைத் தமிழுரையுடன் வெளியிடுவதை அறிந்து மிகவும் சந்தோஷிக்கிறோம்.

ஆஸ்திகர்கள் இந்த ஸ்தோத்திர ரத்தினங்களைப் பொருளறிந்து படித்தும் கேட்டும், பகவத் பக்தியில் திளைத்த உள்ளத்தினராய், ஸ்ரீ சந்த்ரமௌளீச்வரரின் கிருபைக்குப் பாத்திரராகி, ஸகல பாக்கியங்களையும் பெறுவார்களாக.

| | | |
|---|---|---|
| யாத்ராஸ்தானம்<br>இளையாத்தகுடி<br>சுபக்ருத் ச்ராவண<br>சுத்தப்ரதமா | } | **நாராயண ஸ்ம்ருதி:** |

# ॥ श्रीमीनाक्षीस्तोत्रम् ॥

# ஸ்ரீ மீனாக்ஷீ ஸ்தோத்ரம்



मधुरापुरनायिके नमस्ते मधुरालापिशुकाभिरामहस्ते ।
मलयध्वजपाण्ड्यराजकन्ये मयि मीनाक्षि कृपां विधेहि धन्ये ॥१॥

மதுராபுரநாயிகே நமஸ்தே
மதுராலாபிசுகாபிராமஹஸ்தே |
மலயத்வஜபாண்ட்யராஜகந்யே
மயி மீநாக்ஷி க்ருபாம் விதேஹி தந்யே || 1

**मधुरापुरनायिके**-*மதுரைமா நகரத்துத் தலைவியும்,* **मधुरालापिशुक**-*இனிமையாகப் பேசுகின்ற கிளியால்,* **अभिरामहस्ते**-*அழகிய கையோடு கூடியவளும்,* **मलयध्वज-पाण्ड्यराजकन्ये** - *மலயத்வஜனென்ற பாண்டியநாட்டு மன்னனின் மகளுமான,* **मीनाक्षि** - *மீன் போன்ற கண்களை யுடையவளே!* **ते**-*உனக்கு,* **नमः**-*நமஸ்காரம்.* **धन्ये**-*(உன்னைத் துதிக்கும்) பாக்கியம் பெற்ற,* **मयि** - *என் விஷயத்தில்,* **कृपां**-*கருணையை,* **विधेहि** - *செலுத்து வாயாக.*

கருத்து :—இம் மீனாக்ஷி ஸ்துதியில் மீனாக்ஷிக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அடைமொழிகள் யாவும் விளி வேற்றுமையில் இருப்பது கவனிக்கத்தக்கது. பாண்டிய மன்னனாகிய மலயத்வஜன் காலகதி யடைந்த பிறகு அவர் புதல்வியான மீனாக்ஷி அப்பாண்டிய நாட்டை

யாண்டுகொண்டு, திக்விஜயஞ் செய்து, வடகிழக்கு மூலையாகிய ஈசான திக்கோணத்தை வெல்லச் செல்லுங்கால் யுவ்வேடம் பூண்டுவந்த சிவபெருமானைக் கண்டு தன் மூன்ருவது ஸ்தனம் மறைய, ஏற்கனவே நிகழ்ந்த அசரீரி வாக்கின்படி, இவரே நம் கணவர் என்று தீர்மானித்துச் சிவபெருமானை மணந்த பிறகு, ஸுந்தர பாண்டியராஜன் என்ற திருநாமத்துடன் மதுரை மாநகரில் சிவபெருமான் அரசுபுரிந்து வந்தார் என்ற திருவிளையாடல் புராணக் கதை இங்குக் குறிப்பிடப்படுகிறது. ஒவ்வொரு ச்லோகத்திலும் "மீனாக்ஷி தேவியே!என்னிடத்தில் தயை காட்ட வேண்டும்" என்ற வேண்டுகோளுக்கு அநுகுணமாக, धन्ये, शान्ते, दीने என்ற விசேஷணங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

பாண்டிய தேசத்து மன்னனை மலயத்வஜ ராஜனது தவப்புதல்வியாக அவதரித்து, மதுரைமா நகரத்துத் தலைவியாக விளங்குபவளும், கிளியைக் கையில் அணிந்து அதற்கு இனிமையான பேச்சுக்களைப் பயிற்சிசெய்து வைத்திருப்பவளுமான ஓ மீனாக்ஷியே! உன்னைத் துதிக்கும் பாக்கியம் பெற்ற என் விஷயத்தில் கருணை கூர்ந்து மனோரதங்களைக் கைகூடச் செய்வாயாக. பிறரைத் தனிகனாகச் செய்பவன் சிறந்த தனவந்தனாக இருத்தல் வேண்டும். பிறரை ஆனந்திக்கச் செய்பவன் அதிக ஆனந்தியாக இருத்தல் வேண்டும். அவ்விதமே கிளிகளுக்கு இனிய மொழி கற்பிப்பவள் ஸ்வயம் இனிய மொழி நிரம்பியவளா யிருத்தல்வேண்டும் என்பது கருத்து.

**குறிப்பு:—உன்னைத் துதிக்கும் பாக்கியம் பெறும்படி எனக்குக் கிருபை செய்த நீ மற்ற எல்லா விஷயங்**

களிலும் தன்யனாக ஆகும்படி கிருபை செய் என்பது கருத்து.

இந்த ச்லோகத்தில் मयि என்ற சொல்லுக்கு, 'அகந்தையுள்ளவனாக இருக்கிறேன்; ஆதலால் ஸர்வானர்த்த பீஜமான அந்த அகந்தையை அகற்றி, தேவி, நீ எனக்கு அருள்புரிய வேண்டும்' என்பது கருத்து.

कचनिर्जितकालमेघकान्ते कमलासेवितपादपङ्कजान्ते ।
मधुरापुरवल्लभेष्टकान्ते मयि मीनाक्षि दयां विधेहि शान्ते ॥ २ ॥

2. கசநிர்ஜிதகாலமேககாந்தே
 கமலாஸேவிதபாதபங்கஜாந்தே ।
மதுராபுரவல்லபேஷ்டகாந்தே
 மயி மீநாக்ஷி தயாம் விதேஹி சாந்தே ॥

कचनिर्जित - குழலால் ஜயிக்கப்பட்ட, कालमेघकान्ते- மழைக் காலத்து மேக காந்தி வாய்ந்தவளும், कमलासेवित - இலக்குமியால் ஸேவிக்கப்பட்ட, पादपङ्कजान्ते - தாமரை போன்ற திருவடியின் விரல் களையுடையவளும், मधुरापुरवल्लभ-மதுரைமா நகரத்து அரசனாகிய ஸௌந்தரபாண்டிய ராஜனுடைய, इष्टकान्ते- அன்பிற்கிடமான காதலியுமான, मीनाक्षि - மீன லோசனியே! शान्ते - (ஐம்புலன்களை) அடக்கிய, मयि - என் விஷயத்தில், दयां - கருணையை, विधेहि - கொள்வீராக.

கருத்து:—மாரிக்காலத்து நீருண்ட மேகம்போலக் கருங்குழல் கூட்டத்தால் விளங்குபவளும், இலக்குமியால் தாமரைத் திருவடிகளில் பணியப்பெற்றவளும், உம்மை மணந்த ஈசனை ஸௌந்தர பாண்டியராஜன்

என்ற பெயருடன் மதுரை மாநகரில் அரசு புரியும்படி செய்தவளுமான ஓ மீன லோசனி! ஐம்புலன்களை அடக்கி உம்மைத் தியானிக்கும்படி செய்த நீரே என் விஷயத்தில் மேலும் கருணை கொள்வீராக.

குறிப்பு :—மீன்போல ஸூக்ஷ்மமாகக் கவனிக்கும் சக்தி வாய்ந்தவளாதலால் என்னையும் சற்று நோக்கிக் கிருபை செய். ஐம்புலன்களை அடக்கி உன்னைத் தியானிக்கும் சக்தி ஏற்படும்படி தயை காட்டுவாயாக என்பதும் பொருள்படும். निधेहि, विधेहि என்ற இரு பதங்கள் மாறிமாறி வருகின்றன. निधेहि வைத்துவிடு, विधेहि கட்டளையிடு (விதிசெய்) என்று கொஞ்சம் ஸூக்ஷ்மமாக அர்த்தபேதம் இருந்தாலும் விதி செய்து, கட்டளையிட்டு, என்னிடம் கருணையை ஸ்திரமாக நிலை நாட்டி வைத்துவிடு என்ற இரண்டு பதங்களின் பொருளும் ப்ரதி ச்லோகம் கொள்ளல் வேண்டும். கேசத்தையும் பாதத்தையும் வர்ணித்தால் ப்ரத்யா ஹார ந்யாயமாக, கேசாதி பாதாந்தமான தேவியின் ஸர்வ அவயவங்களை ஸங்க்ரஹித்து வர்ணித்ததில் தாத்பர்யம். மதுரை மாநகரை இனிமையாகக் களிக்கும்படி அரசுபுரியும் ராஜனுடைய காதலி என்றதால் ப்ரஜாரஞ்ஜனத்தில் இருவரும் ஈடுபட்டு ஊக்கத்துடன் ஜனங்களைக் களிக்கச் செய்கிறவர்களென்றும் கணவன் மனோரதத்தை அநுஸரிப்பதே ஸதீதர்மம் என்றும் விளங்குகிறது.

कुचयुग्मविधूतचक्रवाके कृपया पालितसर्वजीवलोके ।
मलयध्वजसंततेः पताके मयि मीनाक्षि कृपां निधेहि पाके ।। ३ ।।

3. குசயுக்மவிதூதசக்ரவாகே
க்ருபயா பாலிதஸர்வஜீவலோகே |
மலயத்வஜஸந்ததேঃ பதாகே
மயி மீநாக்ஷி க்ருபாம் நிதேஹி பாகே ||

**कुचयुग्म** - *இரண்டு கொங்கைகளால்,* **विधूत** - *அவமதிக்கப்பட்ட,* **चक्रवाके** - *சக்ரவாகபக்ஷியை யுடையவளும்,* **कृपया** - *கருணைகூர்ந்து,* **पालित** - *காப்பாற்றப்பட்ட,* **सर्वजीवलोके** - *ஸகல ப்ராணி வர்க்கங்களை யுடையவளும்,* **मलयध्वजसंततेः** — *மலயத்வஜராஜனது மரபிற்கு,* **पताके** - *கொடி போன்றவளுமான,* **मीनाक्षि** - *மீனாக்ஷியே!* **पाके** - *பாலனாகிய (விவேக மற்ற),* **मयि** - *என்னிடத்தில்,* **कृपां** - *கருணையை,* **निधेहि** - *வைப்பீர்களாக.*

**கருத்து:**—சக்ரவாகப் பறவைகளையொத்த இரு கொங்கைகளால் எழில் பெற்றவளும், தயை கூர்ந்து எல்லா ப்ராணி வர்க்கங்களையும் ஸம்ரக்ஷிப்பவளும், மலயத்வஜ பாண்டிய ராஜனது மரபிற்குக் கொடிபோல விளங்கி, அந்த மரபைக் கீர்த்திபெறச் செய்பவளுமான மீனாக்ஷி தேவியே! விவேகமற்ற பாலனாகிய எனக்கு நீரே ஆலோசித்து ஹிதத்தைத் தெரிவித்துக் கருணை புரிவீராக.

**குறிப்பு:**—கர்ம பலன்களை அளிக்கும் தேவியே! ஸுக்ருதத்தைச் செய்பவனுக்குப் பலன் அளிக்கிறேன் என்று இருக்கக் கூடாது. தானே ஸுக்ருத துஷ்க்ருத கர்மாக்களை அறிந்து செய்யத் தகுந்த விவேகமற்றவன் யான். அது மட்டுமல்லாமல் அகந்தையும் நிரம்பப் பெற்றவன். ஆதலால் பாலர்களுக்கு விவேகமற்ற பால்ய தசையில் மாதா பிதாக்கள் ஹிதமறிந்து பாலர்

களை அந்த அந்தக் காரியங்களைச் செய்விப்பதுபோல உலக அன்னையாகிய நீதான் விவேகமற்ற பாலனுக்கு ஹிதத்தை அறிவித்து அவைகளில் ப்ரவ்ருத்தித்துப் பலனடையும்படி செய்யவேண்டும்.

கொடி (த்வஜம்) உன்னத ஸ்தானத்திலிருந்து அனைவரும் தூரதேசத்திலுள்ளவர்களும் அறியச் செய்வது போல, மலயத்வஜ மரபைப் புகழ்படுத்தி உலகப் பிரசித்தமாக்கியவள் மீனாக்ஷி தேவி.

**विधिवाहनजेतृकेलियाने विमतामोटनपूजितापदाने ।**
**मधुरेक्षणभावपूतमीने मयि मीनाक्षि कृपां विधेहि दीने ॥ ४ ॥**

4. விதிவாஹநஜேத்ருகேலியாநே
விமதாமோடநபூஜிதாபதாநே ।
மதுரேக்ஷணபாவபூதமீநே ।
மயி மீநாக்ஷி க்ருபாம் விதேஹி தீநே ॥

**विधिवाहनजेतृकेलियाने** - *விளையாட்டு நடையால் அன்ன (பிரம்மாவின் வாகனம்) நடையை ஜயிக்கிறவளும்,* **विमता-मोटनपूजितापदाने**-*சத்துருக்களை வென்றதால் புகழப்படுகிற சரித்திரத்தையுடையவளும்,* **मधुरेक्षणभावपूतमीने** - *அழகிய கண்களாக அமைந்ததால் புனிதமாக்கப்பட்ட மச்சத்தையுடையவளுமான,* **मीनाक्षि** - *மீனாக்ஷியே!* **दीने** - *மிக எளியவனான,* **मयि** - *என் விஷயத்தில்,* **कृपां विधेहि** - *கருணை புரிவீராக.*

**கருத்து:—**நடையிற் சிறந்த அன்ன நடையையும் அதிசயித்த விளையாட்டு நடைவாய்ந்தவளாதலால் நடையில் அன்னப்பக்ஷியை ஜயிக்கும் இயற்கை வாய்ந்தவளும், வேத முரண்பாடான மதங்களை அறவே

அழித்து வேத மார்க்கத்தை நிலை நாட்டியதால், துஷ்டர்களை அடக்கி ஸாதுக்களை உய்யச் செய்ததால் தேவ ஸ்திரீகள் முதலியவர்களால் புகழ்ந்து கொண்டாடிப் பாடப்படும் சரித்திரம் வாய்ந்தவளும், உருவத்திலும் துறுதுறுப்பான இனிய பார்வையிலும் கண்களால் மீனை ஒத்தவளுமான ஓ மீனாம்பிகையே! மிக எளியவனான என் விஷயத்தில் தயையைச் செலுத்துவாயாக.

குறிப்பு :—விளையாட்டு நடையே அன்ன நடையை ஜயிக்கும் வல்லமை வாய்ந்ததென்றால் ப்ரயத்ந புரஸ்ஸரமாக, புத்தி பூர்வகமாகச் செய்யப்படும் நடையின் அழகு வர்ணிக்கத் தக்கதன்று என்பது பொருள். தேவியின் அவதாரங்களுக்கு வேத முரண்பாடான மதங்களை அழித்து வேத வித்வேஷிகளான துஷ்டர்களை த்வம்ஸம் செய்வதுதான் முக்கியப் பலன் என்பதைக் குறிக்கிறது. மீன்கள் ஜலத்திலுள்ள அழுக்கை அகற்றிச் சுத்தம் செய்வதுபோல, பக்தர்களின் தைந்யத்தை நீக்கிப் பாக்கியமளிக்க வல்லமை வாய்ந்த கடாக்ஷம் பெற்றவள் மீனாம்பிகை.

तपनीयपयोजिनीतटस्थे तुहिनप्रायमहीधरोदरस्थे ।
मदनारिपरिग्रहे कृतार्थे मयि मीनाक्षि कृपां विधेहि सार्थे ॥५॥

5. தபநீயபயோஜிநீதடஸ்தே
துஹிநப்ராயமஹீதரோதரஸ்தே ।
மதநாரிபரிக்ரஹே க்ருதார்த்தே
மயி மீநாக்ஷி க்ருபாம் நிதேஹி ஸார்த்தே ॥

**तपनीयपयोजिनीतटस्थे** - பொற்றாமரைக் குளத்தின் கரையில் இருப்பவளும், **तुहिनप्रायमहीधरोदरस्थे** – பனி

நிரம்பிய மலையின் நடுவில் இருப்பவளும், (இமய மலையின் பெண்ணானவளும்), मदनारिपरिग्रहे - காமனை எரித்தவனின் காதலியும், कृतार्थे - பயன் அனைத்தையும் பெற்றவளுமான, मीनाक्षि - மீனாக்ஷியே! सार्थे - பயனைப்பெற விரும்புகின்ற, मयि - என்னிடத்தில் कृपां - கருணையை, विधेहि - வைப்பீராக.

கருத்து :—"ஹேமாப்ஜிநீ புஷ்கரிணீ" "பொற்றாமரைக் குளம்" என்று பிரசித்தி பெற்ற தடாகத் தடத்தில் வீற்றிருப்பவளும், பூமியைத் தாங்கும் பனிமலை நடுவில் இருப்பவளும், பனிமலை வயிற்றில் உதித்தவளும், காமனை வென்ற பெருமானை வசப்படுத்திய காதலியும், அவாப்த ஸமஸ்த காமனைகளை யுடையவளுமான ஓ மகாதேவியே! விருப்பம் நிரம்பிய இச்சிறுவன் மீது தயை செலுத்திக் குழந்தையின் சில்லறை விருப்பங்களைக் கொடுத்து என்னைக் களிப்படையச் செய்வாயாக.

குறிப்பு:—தங்கத் தாமரைகள் நிரம்பிய புஷ்கரிணியின் அழகு கோடி சூரியன் உதித்ததை ஒத்தது. அந்தத் தடாகக் கரையில் வசிக்கும் மீனலோசனியின் தேஜஸ்ஸோ மனத்தாலும் மதிப்பிடத் தகாதது. குளிர்ந்த ஹ்ருதயம் படைத்த தேவி, பனியால் குளிர்ந்த மலைநடுவில் வசிப்பதும் அந்த மலையின் வயிற்றில் அவதரித்ததும் பொருத்தமானதே. பூமியைத் தாங்கும் மலையில் உண்டாகி அங்கேயே வீற்றிருப்பதும் உலகனைத்தும் காக்கும் பாரம் பூண்ட தேவிக்குத் தகுந்ததே. மதம் முதலிய அரிஷ்டவர்க்கங்களை ஒழித்து பக்தர்களைத் தான் அநுக்ரஹித்து க்ருதார்த்தர்களாகச் செய்வாள் மீனாம்பிகை என்பதும்

மற்றொரு பொருள்: உன் பக்தர்களின் கூட்டத்தில் கலந்த என் குற்றங்களைக் களைந்து தயைகூர்ந்து என்னைப் பக்தனென்று காப்பாயாக.

**कलकीरकलोक्तिनादद‌क्षे कलितानेकजगन्निवासिरक्षे ।**
**मदनाशुगहल्लकान्तपाणे मयि मीनाक्षि कृपां कुरु प्रवीणे ॥६॥**

6. கலகீரகலோக்திநாததக்ஷே
கலிதாநேகஜகந்நிவாஸிரக்ஷே |
மதநாசுகஹல்லகாந்தபாணே
மயி மீநாக்ஷி க்ருபாம் குரு ப்ரவீணே ||

**कलकीर** - இனிமையாகப் பாடுகின்ற கிளியினுடைய, **कलोक्ति** - அழகிய மொழி போன்ற, **नादद‌क्षे** - இசையில் தேர்ச்சி பெற்றவளும், **कलितानेकजगन्निवासिरक्षे** - உலகத்தில் வசிக்கும் பிராணிகளைக் காப்பவளும், **मदनाशुग** -*மன்மதனது பாண மாகிய, **हल्ल** - செந்தாமரையால், **कान्तपाणे** - அழகிய கையையுடையவளுமான, **मीनाक्षि** - மீனாக்ஷியே! **प्रवीणे** - (உனது கருணையால்) கொடுக்கப்படுகிற சுகசாதனங்களை ரக்ஷிக்கும் வல்லமை வாய்ந்த, **मयि** - என்னிடத்தில், **कृपां कुरु** - கருணை செய்வீராக.

கருத்து:—கிளிபோல இனிய மொழிகளாலேயே துஷ்டர்களை அடக்கி, உலகில் வசிக்கும் உயிர்களனைத்தையும் காப்பவளும், பஞ்சபாணனென்று உலகப் பிரசித்தனாகி மதத்தைத் தரும் காமனுடைய முதல் பாணமாகிய அரவிந்தத்தைக் கையில் தாங்கிய

---

*தாமரை, அசோகம், மாம் பூ, நவமல்லிகை, கருநீல புஷ்பம் இவ்வைந்தும் மன்மதனுடைய பாணங்களாகும்.

வஞ்மான ஓ மீனாம்பிகையே! உன் ஹிதமொழிகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்கத் திறமை வாய்ந்த தாஸனான என் விஷயத்தில் கருணை செய்வீராக.

குறிப்பு:—இனிய மொழிகளால் அனைவரையும் ரக்ஷிப்பது எளிது. ஸாம தான பேத தண்டம் என்ற நான்கு உபாயங்களில் சிறந்தது ஸாமம். அதனால் ஸாத்தியமாகாதது ஒன்றுமில்லை. ஸங்கீத நாதத்தால் எவ்விதத் துன்பமும் அகலும். ஸ்ரீ வாஸுதேவனது வேணுநாதத்தால் பசு பக்ஷிகளுங்கூடப் பசியறியாமல் மயங்கி நின்றது உலகம் அறிந்த விஷயம். சங்கீதத்தால் அநுராகம் வளர்வது சகஜம். प्रवीणे என்ற பதம் சிறந்த வீணை வாத்தியம் தரித்தவள் என்றும் பொருள் படும். வீணாதாரியான எனக்கு இனிமையான தந்த்ரீ நாதத்தைக் கொடுத்து உலகங்களைச் சந்தோஷப் படுத்தும் (மதப்படுத்தும்) சக்தியைத் தந்தருள்வாயாக.

मधुवैरिविरिञ्चिमुख्यसेव्ये मनसा भावितचन्द्रमौलिसव्ये ।
तरसा परिपूतयज्ञहव्ये मयि मीनाक्षि कृपां विधेहि भव्ये ॥ ७ ॥

7. மதுவைரிவிரிஞ்சிமுக்யஸேவ்யே
மநஸா பாவிதசந்த்ரமௌலிஸவ்யே |
தரஸா பரிபூதயஜ்ஞஹவ்யே
மயி மீனாக்ஷி க்ருபாம் விதேஹி பவ்யே ||

मधुवैरि-மதுவை அழித்த மகாவிஷ்ணு, विरिञ्चि - பிரம்மதேவன், मुख्य - முதலியவர்களால், सेव्ये - ஸேவிக்கப்படுகிறவளும், मनसा-மனத்தினால், भावित - தியானிக்கப்படுகிற, चन्द्रमौलि-सव्ये - சிவனது இடப்

புறமாக இருப்பவளும், तरसा - சக்தியினால், परिपूत - நன்கு புனிதமாக்கப்பட்ட, यज्ञहव्ये - வேள்வியின் ஹவிர்ப்பாகத்தையுடையவளுமான, मीनाक्षि - ஏ மீனாக்ஷியே! भव्ये - பணிந்தவளாகிய, मयि - என் விஷயத்தில், कृपां - கருணையை, विधेहि - புரிவீராக.

பிரம்மா விஷ்ணு முதலிய தேவர்கள் இடைவிடாமல் தேவியைத் தியானிக்கிறார்கள். தேவி தெளிந்த மனத்தோடு இடைவிடாமல் தன் பதியான சிவனது இடப்பக்கத்தில் அமர்ந்துகொண்டு சிவனையே தியானிக்கிறாள்.

கருத்து (i) :—பிரமன், விஷ்ணு முதலியவர்களால் ஸேவிக்கப் படுகிறவளும், பிரமன் முதலியவர்களுக்குப் பிரதானமான உபாஸ்ய தேவதையாக இருப்பவளும், சந்திரனைச் சேகரமாக அணிந்துகொண்ட சிவனது இடப்புறமாக அமர்ந்திருப்பவளும், யாகங்களின் ஹவிர்ப்பாகத்தை புனிதமாக்குபவளுமான ஓ மீனாக்ஷித் தாயே! பணிந்த இந்தத் தாஸனுக்குத் தயை புரிவாயாக.

கருத்து (ii) :—உலகங்களைப் படைக்கும் பிரம்மதேவனுக்குப் படைத்தல் சக்தியையும், காக்கும் விஷ்ணுவுக்குக் காத்தல் சக்தியையும் கொடுத்தருளுவதால், அவர்களால் அந்த அந்தத் தொழில் புரியுங்கால் ஸேவிக்கப்படுகிறாள். சந்திரனிடமிருந்து மனம் உற்பத்தியானதாக ஸ்ருஷ்டி ப்ரகரணங்களில் சொல்லப்பட்டிருப்பதால், மனத்துக்கு அநுக்ரஹ சக்தியைத் தந்தருளுவது சந்திரன். அந்தச் சந்திரன் தலையில் அணியாக்கப்பட்டிருக்கும் பொழுது அந்த அநுக்ரஹ தேவதையின் முன்னிலையில் மனத்தால் பதியை

நினைப்பது மிக எளிது என்பதைக் காட்டுகிறது. சூரியனுடைய ப்ரஸாதத்தால் கண் சக்தி வளர்வதுபோல, சந்திரன் அநுக்ரஹத்தால் மனத்தின் ஸ்மரண சக்தி வளர்கிறது.

குறிப்பு :—யாகங்களில் கொடுக்கப்படும் ஹவிர்ப் பாகம் மந்திர மஹிமையால் சுத்தமாகி அந்த அந்தத் தேவதைகளின் திருப்திக்கு வேண்டிய அளவு வளர்கின்றது என்பது ச்ருதி ஸித்தாந்தம். அதன்படி வேத வாக்ரூபியாக இருந்து யாகங்களில் கொடுக்கப்படும் ஹவிர்ப்பாகங்களைச் சுத்தமாக்கி வேண்டிய அளவு வளரச் செய்து அந்த அந்தத் தேவதைகளைப் புஜிக்கச் செய்து திருப்தி செய்விப்பவளான பரதேவதையே! சரண்யையான நீ, சரணமடைந்திருக்கும் என்னை, தயை கூர்ந்து காக்க வேண்டியது மிக்க அவசியமானது.

जगदम्ब कदम्बमूलवासे कमलामोदमुखेन्दुमन्दहासे ।
मदमन्दिरचारुदृग्विलासे मयि मीनाक्षि कृपां निधेहि दासे ॥८॥

8. ஜகதம்ப கதம்பமூலவாஸே
கமலாமோத முகேந்துமந்தஹாஸே ।
மதமந்திர சாருத்ருக்விலாஸே
மயி மீநாக்ஷி க்ருபாம் விதேஹி தாஸே ॥

जगदम्ब - லோகமாதாவும், कदम्बमूलवासे - கடம்பமரத்தினடியில் வசிப்பவளும், कमलामोद - தாமரை மணம் வீசும், मुखेन्दु - சந்திரனுக்கொப்பான முகத்தில், मन्दहासे - புன்னகை கொண்டவளும், (அல்லது कमलामोद - லக்ஷ்மீ கடாக்ஷம் நிரம்பிய, मुखेन्दुमन्दहासे -

சந்திரன் போன்ற முகத்தில் புன்னகையை யுடைய வளும்), मदमन्दिर – மதத்திற்கிருப்பிடமாகிய, चारुदृग्विलासे - அழகிய கண்ணோக்கையுடையவளுமான, मीनाक्षि-மீனாக்ஷியே! दासे-(புன்னகையையும் கடாக்ஷத்தையும் விரும்பி நிற்கும்) தாஸனாகிய, मयि-என் விஷயத்தில், कृपां निधेहि- கருணை வைப்பீராக.

கருத்து :—தாமரை போன்ற மணம் வீசும் நிச்வாஸம் பெற்றவளும், சந்திரன் போலக் களிப்பூட்டும் முககாந்தி நிரம்பியவளும், புன்னகையால் பக்தர்களை ஆனந்திக்கச் செய்பவளும், அழகிய கடாக்ஷத்தால் ஸம்பத்தை அளித்து மதம் நிரம்பச் செய்பவளும் கடம்ப மரத்தடியில் வசிப்பவளுமான ஓ உலகத்தாயே! தாஸனுக்குப் புன்னகையையும் கடாக்ஷத்தையும் அநுக்ரஹிப்பாயாக.

குறிப்பு :—சூரியனுடைய ஒளி கடுமையானது. அதற்கு மாறுபாடாகச் சந்திரனது ஒளி மந்தமானது. ஆதலால் சந்திரன் போன்ற முகத்திலுண்டாகும் ஹாஸம் மந்தமாயிருப்பது பொருத்தமானது. சந்திரன் ஒளி, தாமரைகளை (ஆமோதிக்க) மலரச் செய்கிறது என்பது இயற்கைக்கு முரண்பாடு ஆயினும், முக சந்திரனது ஹாஸம் லக்ஷ்மி தேவியை வளர்க்கிறது என்பது பரிஹாரம் ஆனதுபற்றி விரோதாபாஸ அணியாக இங்கு அமைந்துள்ளது.

पठतामनिशं प्रभातकाले मणिमालाष्टकमष्टभूतिदायि ।
घटिकाशतचातुरीं प्रदद्यात् करुणापूर्णकटाक्षसन्निवेशात् ॥ ९ ॥

9. படதாமநிசம் ப்ரபாதகாலே
மணிமாலாஷ்டகமஷ்டபூதிதாயி ।
கடிகாசதசாதுரீம் ப்ரதத்யாத்
கருணாபூர்ணகடாக்ஷஸந்நிவேசாத் ॥

**अष्टभूतिदायि** - அணிமாதி அஷ்ட ஐச்வரியங்களை அளிக்க வல்லமையுள்ள, **मणिमालाष्टकं** - (மணிகள் கோர்த்த மாலை போன்ற) மணிமாலாஷ்டகம் என்ற இந்தத் துதி, **अनिशं** - தினந்தோறும், **प्रभातकाले** - வைகறை வேளையில், **पठतां** - (தேவியை த்யானித்து) பாராயணம் செய்பவர்களுக்கு, **करुणापूर्ण** - தயை நிரம்பிய, **कटाक्षसन्निवेशात्** - கடைக்கண்ணோக்கின் சம்பந்தத்தால், **घटिकाशतचातुरीं** - (ஒரு முகூர்த்தத்தில் நூற்றுக்கணக்கான விஷயங்களைக் கவனிக்கும்) சதாவதானம் என்ற சக்தியை, **प्रदद्यात्** - அளிக்கட்டும்.

கருத்து:—நவரத்ன மாலைபோல ஒன்பது செய்யுள்களாலாகிய இந்த மீனாக்ஷி ஸ்துதியைத் தவறாமல் பிரதி தினம் அதிகாலையில் எழுந்து பக்தியோடு படிப்பவர்களுக்கு, தேவியினது கடாக்ஷ பலத்தால் அஷ்டைச்வரியமும், சதாவதானம் என்ற விசேஷ சக்தியும் உண்டாகும்.

குறிப்பு:—அஷ்டகம் அஷ்ட ஐச்வரியங்களை அளிப்பது பொருத்தமானதே. முதலில் தயைபுரிய வேண்டுமென்று பிரார்த்தித்துப் பிறகு மந்தஹாஸத்தையும் கடாக்ஷ விலாஸத்தையும் வேண்டியதால் மீனாம்பிகை தயை நிரம்பிய புன்னகையுடன் கடாக்ஷத்தை அளித்து விரும்பிய யாவற்றையும் நிறைவேற்றிக் களிக்கச் செய்வாள். மீன் ஜலத்தில் இருக்கும் அழுக்கை அகற்றிச் சுத்தம் செய்வது யாம் அறிந்தது. அவ்வாறே,

மீனாம்பிகையும் தாஸராக வந்தடைந்த அனைவரையும் தன் கடாக்ஷத்தால் வலுவிலே பாவங்களை விலக்கிப் புனிதர்களாக்கி ஞான ஒளி தந்து அருள்புரிகிறாள் என்பது வெளியாகிறது.

श्रीमीनाक्षीस्तोत्रं समाप्तम् ॥

ஶ்ரீ மீனாக்ஷீ ஸ்தோத்ரம் ஸமாப்தம்

**ஶ்ரீ மீனாக்ஷியின் துதி முற்றிற்று**

॥ शुभम् ॥

---

ஸ்ரீ சந்த்ரமௌலீச்வராய நம:

# ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தின்

## சில முக்கிய வெளியீடுகள்

ஒவ்வொரு புத்தகமும் பல படங்களுடனும் ஸ்ரீ ஆசார்யாளுடைய அநுக்ரஹ பூர்வகமான ஸ்ரீமுகத்துடனும் கூடியது.

| | | ரூ. பை. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ பஜகோவிந்தம்—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—50 |
| 2. | ஸ்ரீ முகுந்தமாலா—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் உரையும் கூடியது .... .... .... | 0—60 |
| 3. | ஸ்ரீ ப்ரச்னோத்தர ரத்னமாலிகா—ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இயற்றியது (தமிழ் லிபியில்) .... .... .... | 0—25 |
| 4. | ஸ்ரீ மூகபஞ்சசதீ—ஸம்ஸ்கிருத மூலமும் (தமிழுரையுடனும்) .... .... .... | 2—50 |
| 5. | ஸ்ரீ ஆனந்த ஸாகரஸ்தவம்—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் இங்கிலீஷ் அனுவாதமும் .... .... | 0—87 |
| 6. | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்—தேவநாகரி, தமிழ் லிபிகளில் மூலமும், தமிழ் அனுவாதமும் .... | 2—50 |
| 7. | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரமும், நாமாவளியும்—ஸம்ஸ்கிருதத்தில் .... .... | 0—40 |
| 8. | —ஷை—தமிழில் ச்லோகமும், நாமாவளியும்.... .... | 0—30 |
| 9. | ஸ்ரீசிவபாதாதி கேசாந்த வர்ணநம் முதலிய ஐந்து சிவ ஸ்தோத்ரங்கள்—ஸம்ஸ்கிருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—87 |
| 10. | விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம்—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் ஆங்கில அனுவாதங்களும் .... | 0—75 |
| 11. | ஸ்ரீ சாந்தி விலாஸம்—ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—75 |
| 12. | மாத்ருகா புஷ்பமாலா ஸ்துதி—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—62 |
| 13. | ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்—ஸ்ரீ ஸுரேச்வராசார்யாளின் மானஸோல்லாஸ வார்த்திகத்துடன் கூடியது | 1—75 |
| 14. | ஸ்ரீ துர்கா சந்த்ர கலாஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் அருளியது .... .... ... | 0—50 |
| 15. | ஆத்மார்ப்பண ஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் இயற்றியது .... .... .... | 0—75 |

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்

4, பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை-1

லிபர்ட்டி அச்சகம், சென்னை-1